சிங்கப்பூர்

# மூவார் இரத்தினம் செட்டியார் காலமானார்

சிங்கப்பூர் சைவசித்தாந்த வித்தகர், புலவர் மாமணி முரு பழ இரத்தினம் செட்டியார் நேற்று தமிழகத்தில் இறைவன் திருவடி சேர்ந்தார்.

எழுபத்தொரு வயதி நிரம்பிய இரத்தினம் செட்டியார் மலேசியா, சிங்கப்பூர், இந்தியா ஆகிய நாடுகளில் அவருடைய சைவ சிந்தாந்த புலமை காரணமாகப் பெரிதும் மதிக்கப்பட்டார்.

மூவார் இரத்தினம் செட்டியார் என்று பலருக்கும் அறிமுகமாகியிருந்த புலவர் மாமணி எளிமையாகவும் நகைச்சுவையோடும் சைவ சித்தாந்தக் கருத்துக்களை விளக்குவதில் வல்லவர். அவர் பலகாலம் மூவாரிலும் கடந்த சில ஆண்டுகளாக பத்துபகாட்டிலும் வாழ்ந்தார்.

எளிமையோடு மட்டுமன்றி புதுமைக்கருத்து கலந்து சைவ சமய நெறிகளை அவர் விளக்கியதால் இளைஞர்களும் அவருடைய சொற்பொழிவுகளை ஆர்வத்தோடு கேட்டனர்.

மலேசியாவின் தோட்டப் புறக் கோவில்களில் நடைபெற்ற உயிர்ப் பலிகளை நிறுத்த அரும்பாடுபட்டு வெற்றி கண்டவர் இரத்தினம் செட்டியார்.

ஆண்டவன் அன்பு வடிவினன், அருளாளன் என்பதால் உடலை வருத்தி எவரும் அவன் அருள்தேட வேண்டியதில்லை என்னும் கருத்தை அவர் தம் சொற்பொழிவுகளில் வலியுறுத்தி வந்தார். இந்த அடிப்படையில் அலகு குத்துவதும் தீ மிதித்தலும் தவிர்க்கப்பட வேண்டும் என்பது அவர் கருத்து.

சிறு தெய்வ வழிபாடு திரு இரத்தினம் செட்டியாருக்குப் பிடிக்காதது. ஆண்டவனின் திரு உருவங்கள் அழகு உருவங்களாய் அமைதல் வேண்டும் என்பதை அவர் கூறியதோடு, பல கோவில்களை அக்கருத்தைப் பின்பற்றுமாறு செய்தார்.

கோவில்களில் தமிழில் அர்ச்சனை செய்ய வேண்டும் என்பதையும் அவர் அறிவுறுத்தி வந்தார்.

மறைந்த சிங்கப்பூர் சைவப் பெரியார் க. அம்பலவாணன் அவர்கள் திருமுறை மாநாட்டை தொடங்க ஆலோசனை வழங்கியவர் இரத்தினம் செட்டியார்.

மலேசியாவில் அருள் நெறித் திருக்கூட்டம் வழியாக பல சைவ சமய வகுப்புகளையும் சொற்பொழிவுகளையும் நிகழ்த்தினார். அப்பேச்சுகள் நூல் வடிவம் பெற்றுள்ளன. அத்தகைய நூலில் ஒன்று, "இதோ சைவ சித்தாத்தம்" என்பது.

இரத்தினம் செட்டியார் சிறந்த இலக்கியவாதியும் கூட. அவர் கம்பராமாயணம் குறித்து சிங்கப்பூரில் தொடர் சொற்பொழிவு ஆற்றியுள்ளார். "வாலிவதம் சரியா?" என்பது அவருடைய நூல்களில் ஒன்று.

"கடவுளால் முடியாத செயல்கள் எவை" என்னும் தலைப்பில் முரு பழ இரத்தினம் செட்டியார் எழுதிய நூல் மிகவும் புகழ்பெற்றது.

தமிழ்நாட்டில் அவர் பெரிதும் மதிக்கப்பட்டவர் என்பதற்கு சைவ சிந்தாந்த பெருமன்றம் தனது நூற்றாண்டு விழாக் கொண்டாட்டங்களுக்கு திரு இரத்தினம் செட்டியாரைத் தலைமை தாங்கச் செய்தது ஒரு சான்று.



யணத்துறை மேம்பாட்டுக் கழகத்தின்

த்

கழகத்தின் நிர்வாக இயக்குநர் திரு பெக் ஹாக் டியாம், மலேசிய பயணத்துறை மேம்பாட்

## ஷரியா நீதிமன்றத்தின்

உங்கள் "A" மற்றும் B பங்குகளை எங்கே விற்பது?